கேளானநாள்யேழிற்குணமதாகும்
கூடிவரும்செல்வம்யெனக்குறித்துச்சொல்லே. (கூ)

இதுவுமது.

(கஉச)குறித்துநின்றவூண் அரசுபகையேஆனால்
கூடிவரப்போரதில்லைபகையும்உண்டு
கறித்துநின்றமணம்போலவருவதில்லை
கனவுகண்டகாட்சியைப்போல் ஆகும்பாரு
தரித்துநின்றுபோனவர்கள் மீள்வதில்லை
தான்நினைத்தகாரியமும்மணம்கூடாது
மரித்திறந்துபோய்விடுவார்பிறந்தபிள்ளை
மாளுமேமோசாலைந்துக்குள்ளேபாரே. (ய)

கார்த்திகையின்பலாபலன்.

(கஉரு)பாரடாகார்த்திகைதான் உதயம்ஆனால்
பண்புடனேநினைத்தபொருள்கருப்பாம்பாரு
தேரடாபெண்பெறுவள்செலவுநேரும்
தேடியதோர்பொருள்வரத்துஇல்லைஇல்லை
காரடாஉடலில்வந்தபிணிதீராது
கனியானபிரபுஉறவாகாதையா
சேரடாநாட்டகம்பம்போலேமக்காள்
சிதறுமேநாள்பத்தில்சிதறும்பாரே. (யக)

இதுவுமது.

(கஉசு)சிதறுமேஊண்பகையேஆகும்காலம்
சிந்தைதனில்நினைத்தபொருள்கல்மண் ஆகும்
பதறுமேஉடல்உயிரும்கிளையும்நேசம்
பகைவரும்பார்உண்பதுவும்இல்லைஇல்லை
அதிறவேபிறந்தபிள்ளைஇறந்துபோகும்
அகலவேபோனவர்கள்மீள்வதில்லை
கதறுமேமூவைந்துநாளைக்குள்ளே
கலங்காதமணங்கூடக்கலங்கும்பாரே. (யஉ)

இதுவுமது.

(கஉஎ)கலங்குமேஅரசுபகைஆனால்மக்காள்
கருத்திலேநினைத்தபொருள்கரிவுருவும்ஆகும்
இலங்குமேஊர்வழிதான்போனபேர்கள்
இனிவருவதில்லையென்றேஇயம்பலாகும்

அ

மலங்குமேநினைத்தபொருள்கைகூடாது
மனதிலேதுயரம்அல்லால்மகிழ்ச்சிஇல்லை
துலங்குமேநாள்எட்டில்பலிதம்ஆகும்
துடிஆனஅரசுபகைபொல்லாதென்னே. (௰௩)

இதுவுமது.

(௧௨அ)பொல்லாதஊண்அரசுபகையேஆனால்
புந்திதனில்நினைத்தபொருள்பொற்சரும்பாம்
நில்லாதுசோபனங்கள்நேர்வதில்லை
நினைத்தொருகாரியமும்வசப்படாது
கொல்லாதுகொல்லும்அடாஉயிரைத்தானும்
கூடிவரல்ஒன்றும்இல்லைசெலவுமெத்த
எல்லாரும்பகைஆவர்நாள்அஞ்சுக்குள்
இனிதானசொல்லும்இல்லைஇவன்பிழைப்பதரிதே. (௰௪)

இதுவுமது.

(௧௨௯)அரிதானஊண்அரசுபகைஇல்லாவிட்டால்
அப்பனேநினைத்ததுதான்வினைஉள்ளகருப்பு
நெறியாகப்போனவர்கள்வருவார்பின்பு
நேசம்இல்லைமனதிற்குத்துயரம்இல்லை
குறிஆனமணம்கூடும்குலைவனமும்ஆகும்
கூடியிருப்பார்பின்புபிரிந்துபோவார்
சரிஆனநாள்ஐந்திற்பலிதம்ஆகும்
நாம்நினைத்தபடிஅவர்க்குமுடியாதுபாரே. (௰௫)

உரோகணியின்பலாபலன்.

(௧௩௰)முடியுமேஉரோகணிதான்உதயம்ஆனால்
முழுமனதாம்நினைத்தபொருள்வெள்ளைப்பூவாம்
கடுஆனமணம்செய்யநன்மைஆகும்
கடைத்தேறப்போனவர்கள்வருவார்இப்போ
மடிவாகப்போனதும்கைவசமேயாகும்
மனத்துயரம்எள்ளவும்வருவதில்லை
படிவாகநாள்ஏழில்நினைத்ததெல்லாம்
பலன்கூறும்சொல்கேட்கஓலைவரும்பாரே. (௰௬)

இதுவுமது.

(௧௩௧)ஓலைவரும்ஊண்பகைஆய்இருந்தால்ஐயா
உளம்நினைத்தபொருள்அதுதான்அழுக்குவெள்ளை

சாலைவரும்மணம்கூடும்உறவுசேரும்
    தனிவழக்குஉண்டாகும்சலனம் இல்லை
காலைவரும்திரேகத்திற்பீடைஉண்டு
    கசிந்தபெலன் இல்லையென்றுகருதலாகும்
மாலைவரும்பெண்பெறுவள்பயமும்கொஞ்சம்
    மனதிற்குச்சந்தோஷம்இல்லைத்தானே, (௰௭)

இதுவுமது.

(௧௫௨) இல்லை அடா அரசுபகைஇருந்தால் ஐயா
    இருதயத்தில்நினைத்தபொருள்கருத்தவெள்ளை
தொல்லை அடாகூடிவரப்போரதில்லை
    துன்பவினைசூழ்ந்துகொண்டுதுயரம்செய்யும்
கல்லை அடாபொருட்சேதம்ஆகும்பாரு
    கனிவானஉறவில்லைபகைஉண்டாச்சு
சள்ளை அடா அரசுபகைபொல்லாதப்பா
    தனில்லொன்றும்வருவதில்லைசடம்நோவாமே. (௰௮)

இதுவுமது.

(௧௫௩) நோவாகும்ஊண் அரசுபகையேஆனால்
    நொய்யமனம்நினைத்தபொருள்கரியேஆகும்
மாவாகும்பலன்ஒன்றும்இல்லை அப்பா
    வந்தவினைதீராதுபழியேசெய்யும்
தேவாகும்மனுஉதவிசற்றும்இல்லை
    செடம்அலைந்துபோவதல்லால்பலன்உண்டோசொல்
காவாகும்பகைத்தபேர்வெல்லார்இப்போ
    கண்டபடிநான்உரைத்தேன்கருதிக்கேளே. (௰௯)

இதுவுமது.

(௧௫௪) கருதிக்கேள்ஊண் அரசுபகைஇல்லாவிட்டால்
    கனிவாகநினைத்தபொருள்விலைபெற்றவெள்ளை
சுருதிக்கேள்மணம்செய்யநன்மைஆகும்
    தூலதூரம்போனவரும்வந்துசேர்வார்
பருதிக்கேள்போனபொருள்வந்துசேரும்
    பகைஇல்லைஉறவாம்உட்பகையும்போச்சு
கருவிக்கேள்நாள்வழிற்பலிதம்ஆகும்
    தான்நினைத்தபடிமுடியும்தப்பாதென்னே. (௨௰

மிருகசீரிடத்தின்பலாபலன்.

(கநடு) தப்பாதமிருகசிரம்உதித்ததானால்
தான்நினைத்தபொருள்இலையின்பச்சை ஆகும்
ஒப்பாதுநினைத்தபடிமுடியாதப்பா
ஊர்வழிப்போனவர்கள்சஞ்சலத்தால்மாய்வர்
அப்பாலும்பணம்இல்லைஊண்பகையே ஆனால்
அதனாலும்வரும்என்றபலன்ஒன்றில்லை
செப்பாதநாள்பத்தில்தீமைவரும்திண்ணம்
ஜெயமாகமாட்டாதுஎல்லாம்தீதே. (உக)

இதுவுமது.

(கநசு) தீதென்றஅரசுபகைஉருந்ததானால்
ஜெயமாகப்போரதில்லைவரத்தும்இல்லை
தூதென்றஓலைவரும்பொருட்சேதம்ஆகும்
துயரமுமேகூடிவிளையாடும்பாரு
வாதென்றஇருவர்பகைஇல்லாவிட்டால்
மனத்துயரம்வெகுகொடுமைஇல்லைஇல்லை
தாதென்றநாள்பத்தில்பலனைக்காட்டும்
தப்பாதுநன்மைஇல்லைதுன்மைஆமே. (உஉ)

திருவாதிரையின்பலாபலன்.

(கநஎ) திண்மையென்றசொல்இல்லைஆதிரைக்கு
சிந்தைதனில்நினைத்தபொருள்நீலவர்ணம்
வண்மையென்றபொருளதுகைவசமேஆகும்
மக்களைஊண்பகைதான்இருக்கொண்ணாது
தண்மையென்றஊர்ப்பயணம்போனபேர்கள்
சடுதியிலேவருவதில்லைஅரசுபகை ஆனால்
உண்மையென்றபொருட்சேதம்உறவுபகை ஆகும்
உத்தமனேஇருவர்பகைஇருக்கொண்ணாதே. (உந)

இதுவுமது.

(கநஅ) ஒண்ணாகஊண்அரசுமித்துருவாய்நின்றால்
உத்தமனேவரும்மரணம்என்னசொல்வேன்
தன்னாலேகூடிவரும்உறவுசேரும்
தண்மைஉடன்பிறபுஉபகாரமாகும்
சொன்னாரேபிறதேசம்போகநன்று
தொடுத்துமணம்செய்யநன்றுசோபனங்கள்கூடும்

எண்ணாதே பிணை இல்லை நன்மை உண்டு
எடுத்ததொரு காரியங்கள் பலிதம் ஆமே. (௨௪)

புனர்ப்பூசத்தின் பலாபலன்.

(௱௩௯) பலிதமடா புனர்ப்பூசம் சேர்க்கையுண்டு
பண்புடனே நினைத்தபொருள் சிவப்பதாகும்
வலிதமடா ஊர்வழிதான் போனபேர்கள்
வருவார்கள் பொருள் உடனே மனமுங்கூடி
கலிதமடா ஊண்பகையாய் இருக்கொண்ணாது
கனிவாகவருமானம் காலவரிசைகுறையும
வலிதமடா அரசுபகை ஆகும்போது
நாடிவரும்பொருள் உடமை நஷ்டம் ஆமே. (௨௫)

இதுவுமது.

(௱௪௰) நஷ்டம் இல்லை ஊண் அரசு பகை இல்லாவிட்டால்
நலமானகாரியங்கள் முடியும்பாரு
தொட்டதெல்லாம் கூடிவரும் மங்களங்கள் கூடும்
தூரத்தின் ஓலைவரும் சுகமதாக
வட்டமூலமாது துணை உண்டுபாரு
மக்களே சிவகலையால் வந்துகூடும்
இட்டமுடன் நாள் அதுதான் இருபதுக்குள்
இசைந்துவரும் நிலம் கொள்ள இனிதாம்பாரே. (௨௬)

பூசத்தின் பலாபலன்.

(௱௪௧) இனிதான பூசம் அது உதயம் ஆனால்
இருதயத்தில் நினைத்தபொருள் கறுத்தவெள்ளை
கனிவானசல்லியமும் சிலுகும் உண்டு
களவாகப்போனபொருள் கைவசப்படாது
தனியான ஊண்பகைதான் மிகுந்தசல்லியம்
தன்மைஉள்ள அரசுபகை ஆகாதையா
துணிவான இவர்பகை மோசம் மோசம்
தொட்டதென்றும் வாழ்வதில்லை துயரம்தானே. (௨௭)

இதுவுமது.

(௱௪௨) துயரமது ஊண் அரசு பகை இல்லாவிட்டால்
சோரமாய்ப்போனபொருள் பாதிகாணும்
பயிரதுவும் மணம் கூடும் அலைச்சல் ஆகு
பகைவுறவு நெடுநாளாய் இருக்காதையா

வயிரமுடன்பிறமனுஷர் வருவார்இப்போ
வந்ததினூற்பொருட்சேதம் உறவுபகைஆகும்
கயில்அதுதான்நாஸ்ஐந்திற் பலனைககாட்டும்
கலங்கும்அடாதுயரத்தால் கலகம்ஆமே. (உ௮)

ஆயில்லியத்தின் பலாபலன்.

(௱சா) கலகம்அடாஆயிலியம்கண்டபோதே
கருத்திலேநினைத்தபொருள் கரிசெல்வெள்ளை
விலகும்அடாபோனஉயிர்திரும்புவதேஇல்லை
மேதினியில்கோவுகொண்டோர் எழுந்திருப்பதில்லை
இலகும்ஒருசோபனங்கள் கூடுவதுபோலே
இருக்கும்அடாஒருபோதும் நடப்பதில்லை
சிறுகுளதாம்ஊண்பகைதான் இருந்தால்மோசம்
சிந்தித்தபடிநடப்ப தில்லைத்தானே. (உக)

இதுவுமது.

(௱சச) இல்லைஎன்றோம்ஊண்அரசுபகைஇல்லாவிட்டால்
இருதயத்தில்நினைத்தபொருள் பலிக்கும்கொஞ்சம்
கொல்லையென்றுபயிர்செய்தால் பலன்உண்டாகும்
கோதையரைமணம் செல்லல்வாழ்வதில்லை
தொல்லையென்றுஒருதொழிலும் செய்யொண்ணாது
தொட்டதெல்லாம்கூடிவர மாட்டாதையா
எல்லையென்றநாள் இருபத்தைந்துக்குள்ளே
இப்பலனைக்கண்டவர்தான் ஏங்குவாரே. (௩0)

மகத்தின்பலாபலன்.

(௱சரு) ஏங்காதேமகமதுதான் உதயம்ஆனால்
என்மகனேநினைத்தபொருள் குங்குமத்தின்வர்ணம்
தாங்காதேபொன்பொருள்கைவசமேஆகும்
தப்பாமல்போனபேர் வருவார்இப்போ
பாங்கியைத்தான்கொள்வதற்குப் பலன்உண்டாகும்
பாகமுடன்மணஞ்செய்ய நன்மைஆகும்
தூங்காதேஊண்பகைதான் ஆகாதையா
சொல்லொண்ணாதரசுபகை கூடாதுபாரே. (௩க)

இதுவுமது.

(௱சசு) கூடாதஊண்அரசு பகைஇல்லாவிட்டால்
கொண்டுசொல்ல உறவுபகைஆவதில்லை

தேடாதுநினைத்தபொருள் கைவசமேயாகும்
தேசத்திற்போனவர்கள் ஜெயமாகவாழ்வார்
நாடாதுமணம்செய்ய நன்மைஆகும்
நடத்துமொருபிறர்உதவி அதிகம்ஆகும்
வாடாதுநாள்பத்தில் பலன்கைக்கூடும்
வண்மையுள்ளமாதர்உற வாகும்பாரே. (௩௨)

பூரத்தின்பலாபலன்.

(௱௪௭) பாரடாபூரமது உதயம்ஆனால்
பண்புடனேநினைத்தபொருள் பசியபச்சை
நேரடாஊர்ப்பயணம் போனபேர்கள்
நேசமாய்வருவதில்லை மணமும்இல்லை
தேரடாபொருள்உடமை சேர்வதில்லை
திடமானசொல்இல்லை உறவும்இல்லை
ஆரடாஊண்பகையே ஆகும்காலம்
அப்பனேகூடியது அறிந்துதானே. (௩௩)

இதுவுமது.

(௱௪௮) அரிதானஅரசுபகை ஆகும்காகம்
அன்புடனேநினைத்தபொருள் கைகூடாது
நெரியானஊண்அரசுபகைஇல்லாவிட்டால்
நினைவிலேநினைத்தபொருள் சிறிதும்கூடும்
வரிதானஉயிர்ச்சேதம் வருமேஅப்பா
மணம்இல்லைஉறவில்லை மகிழ்ச்சியில்லை
எரியானநாள்இதற்கு முப்பத்துக்குள்
எண்ணியதோர்பீடையது விலகும்பாரே. (௩௪)

உத்திரத்தின்பலாபலன்.

(௱௪௯) விலகுமோஉத்திரம்தான் உதயம்ஆனால்
வினவுபொருள்கருஞ்சிவப்பு விளைவித்தாகும்
பலுகுமேபோனபொருள் அசதியிற்காணும்
பழகினபேர்வருவார்கள் பகைஉறவதாகும்
இலகுமேசம்பந்தம் கூடும்பாரு
என்னசொல்வேன்ஊண்பகைதான் இருக்கொணாது
அலகில்லாஅரசுபகை இருந்தால்ஐயா
அப்பனேசஞ்சலத்தில் அழுந்துவானே. (௩௫)

இதுவுமது.

(௭௫௰) அழுந்தவனேஊண் அரசு பகைஇல்லாவிட்டால்
அசதியாற்போனபொருள் அடுத்தவரால்வருகும்
எழுத்துதான் ஊர்ப்பயணம் போனபேர்க்கு
எண்ணியதோர்கருமமுடன்பொருட்சேதம்ஆகும்
கொழுந்தாகநினைத்தபடி முடியாதையா
கோதையரால்கலியமாய்க் கோபமுடன்வருவார்
நுழைந்தாகும்மூவைந்து நாளையிலேபலிதம்
நொந்துமனம்புண்ணாகி இடைஞ்சல்வரும்பாரே. (௩௬)

அஸ்தத்தின்பலாபலன்,

(௭௫௧) வருமானகாரியங்கள் அஸ்தமாகில்
மனதிலேநினைத்தபொருள் பலநிறமும்ஆகும்
உருவானபிறதேசம் போனபேர்கள்
உண்மையுடன்மணம்கூடி வருவார்பாரு
தருவானபொருட்சேதம் களவுபோகும்
தப்பாமல்ஊண்பகைய தாகும்ஆகில்
சருவானபோனபொருள் வருவதில்லை
சண்டாளர்அரசுபகை ஆகாதுபாரே. (௩௭)

இதுவுமது.

(௭௫௨) ஆகாதேஊண்அரசுபகையில்லாவிட்டால்
அப்பனேபொருள்கூடும் திண்ணம்ஆக
ஏகாதேமணம்கூடும் வாழ்வதில்லை
எடுத்ததொருகாரியமும் நேர்வருவதில்லை
போகாதேசஞ்சலமாய் இருந்தபேர்கள்
புனிதமுடன்எழுந்திருந்து வாழ்வதில்லை
நோகாதேஏழைஞ்சு நாளைக்குள்ளே
நுவலும்இந்தபலன்கள்எல்லாம் நேரும்பாரே. (௩௮)

சித்திரையின்பலாபலன்.

(௭௫௩) நேர்ந்துபார்சித்திரைதான் உதயம்ஆனால்
நினைத்தபொருள்சிவப்புவெள்ளை மஞ்சள்ஆகும்
கூர்ந்துபார்நினைத்தபொருள் வருவதில்லை
கொடுத்திடுமேசிலகுசண்டைணம்கூடாது
சார்ந்துபார்ஊண்அரசு பகையேஆனால்
தப்பாதுபொருட்சேதம் உயிரும்சேதம்

கூர்ந்துபார் இருவருடைப்பகை இல்லாவிட்டால்.
கூடுவதும்குறைவதும்இல்லைத்தானே. ௫௯

(௧௫௪) இல்லையேபொருளுடைமைவருவதில்லை
எதிர்த்தவனுக்குஜெயம்ஆகப்போறதில்லை
தொல்லையேஅனுசரித்துசஞ்சலங்கள் ஆகி
தொல்புவியிற்செல்குறைச்சல்பேருண்டாகி
சள்ளையேமனுஉதவிஇல்லாமல்தான்
சஞ்சலத்தால்வெகுதுயரம்வந்துசேரும்
கொள்ளையோனுபத்துநாளைக்குள்ளே
கூடிவரப்போகிறதில்லைகுணத்தைப்பாரே. ௬௰

சுவாதியின் பலாபலன்.

(௧௫௫) குணத்தைப்பார்சுவாதிதான்உதயம்ஆனல்
கூடுதன்னில்நினைத்தபொருள்தங்கம்தங்கம்
மணத்தைப்பார்ஊர்வழியிற்போனபேர்கள்
மனமகிழ்ச்சிமெத்தவுண்டுமங்களம்கூடும்
இனத்தைப்பார்ஆண்குழந்தைபிறக்குமென்றும்
எண்ணியதோர்மருமம்எல்லாம்கைவசமேஆகும்
சனத்தைப்பார்ஊனஅரசுபகைஆகாது
தான்நினைத்தபடிஅங்கேமுடியாதுபாரே. ௬௧

இதுவுமது.

(௧௫௬) முடியாதோஉன்அரசுபகைஇல்லாட்டால்
மெய்குழலாள்பூமடந்தைகிருபையாலே
படியாதோநினைத்ததெல்லாம்கைவசமேஆகும்
பசுமையுள்ளபொருள்கூடும்உறவும்ஆகும்
கடியானசோபனங்கள்கூடும்பாரு
கடல்கவிழ்ந்தபொருள்கூடும்கவலையில்லை
வடிவானஐந்துநாளைக்குள்ளே
மக்களேகூடிவரும்மகிழ்ந்துபாரே. ௬௨

விசாகத்தின்பலாபலன்.

(௧௫௭) மகிழ்ந்துபார்விசாகம்அங்கேஉதயம்ஆனல்
மனத்திலேநினைத்தபொருள்கசப்புள்ளவர்க்கம்
நிகழ்ந்துபார்போனபொருள்தாமிசமேஆகும்
நேரானசோபனங்கள்கூடுவதும்இல்லை

நகர்ந்துபார்ஊண்பகையாம்இல்லாவிட்டால்
நன்மைதின்மைஇரண்டும்உண்டேநயந்துபாரு
தகர்ந்துபார்அரசுபகையாகநின்றால்
தப்பாதுதீமைஎன்றுதான்சொல்வாயே. ௪௩

இதுவுமது.

(௧௫௮) சொல்லாதஊண்அரசுபகைஇல்லாவிட்டால்
சொன்னபடிதப்பாதுநோயில்மாய்வான்
நில்லாமல்வெகுதுயரம்பட்டுதேறி
நேர்மையுள்ளகாலன்வரும்என்றுசொல்லி
பொல்லாதநேரம்என்றுசொல்லுவார்கள்
புதுமையுள்ளகருத்தரித்தகாலம்பாரார்
எல்லாரும்பகையாகும்நாலேந்துக்குள்
இதுபலனேக்கண்டறிந்துஇயம்புவாயே. ௪௪

அநுடத்தின்பலாபலன்.

(௧௫௯) இயம்புவாய்அநுடமெங்கேஉதயமானால்
எண்ணியதோர்பொருள்வெள்ளியென்றுசொல்லு
நயம்பியேஊணதுவும்பகையேதானால்
நலமில்லைகருக்கன்வெள்ளிஎன்றுசொல்லு
பயம்பியேஊணரசுபகையேயானால்
படிகமென்றபீங்காணும்பதிவாய்ச்சொல்லு
துயம்பியேஊணரசுபகையில்லாவிட்டால்
துய்யவெள்ளியென்றுசொல்லிதுணிந்துபாரே. ௪௫

இதுவுமது.

(௧௬௰) துணிந்துபார்பொருளுடைமைகூடிவரும்போது
துணையானசோபனங்கள்நடக்கும்பாரு
அணிந்துபார்பிறதேசம்போனபேர்கள்
ஆள்மோசம்வாராமல்வருவார்இப்போது
தணிந்துபார்சடலத்தில்நோயோஇல்லை
தான்நினைந்தபடிமுடியும்தப்பாதப்பா
குயம்பியேமூணுபத்துநாளுக்குள்ளே
குணமாகக்கூடிவரும்அறிந்துபாரே. ௪௬

கேட்டையின்பலாபலன்.

(௧௬௧) அறிவதுசான்கேட்டைஅங்கேஉதயம்ஆனால்
அப்பனேநினைத்ததுபித்தளையும் ⁰நாறல்
எரிவதுதான்ஊண்பகையேஆகும்ஆகல்
என்னசொல்வேன்அப்பிரகம்என்றுசொல்லு

⁰ நாறல் - தாளகமாம் கெந்தி எனினும் ஒக்கும்.

சரியதுதான் அரசுபகையாகநின்றால்
தப்பாதுமஞ்சள்நிறமானதொடு
முறிவதுதான் ஊண அரசுபகை இல்லாவிட்டால்
மொழிந்தபொருள்சொன்னதுபோற்சொல்லுவாயே. ௪௭

இதுவுமது

(௧௯௨) சொல்லுவாய்நினைத்தபொருள்கூடுவது இல்லை
சுகமானமணம்இல்லை இறவும் இல்லை
மல்லதுவாய்ப்போனபொருள்வாராதப்பா
மறுதேசம்போனவர்கள்வந்துறவும்இல்லை
சொல்லுவதின்னம்என்றுநின்றநிலைபார்த்து
குறிகுணங்கள் ஆராய்ந்துசொல்வாய்மைந்தா
அல்லதுகேள்நாலெட்டுநாளைக்குள்ளே
அப்பனே இதுபலனும் அறிந்துபாரே. ௪௮

மூலத்தின் பலாபலன்.

(௧௯௩) அறிந்துபார்மூலம் அங்கேஉதயம் ஆனால்
அப்பனேநினைத்தபொருள்நிலம்கறைகள் ஆகும்
நெறிந்துபார்ஊண்பகையே ஆகும் ஆகில்
நேரான ஆடுமாடென்றுசொல்லும்
தெறிந்துபார் அரசுபகையாகநின்றால்
திடமாகச்சொல்லுவதுசொற்பலாபம்
எறிந்துபார்ஊண் அரசுபகைஇல்லாவிட்டால்
என்னசொல்வேன்பொருளுடைமைஎன்றுசொல்லே. ௪௯

இதுவுமது.

(௧௯௪) என்றுசொல்லுநினைத்தபொருள்கைவசமேசேரும்
இனிதானமணம்கூடும்பிரபுஉறவாகும்
அன்றுசொல்லுஆள்வரத்தால்பொருள்கைசிக்கும்
அன்பானசொல்கேட்டுசந்தோஷம்ஆகும்
நன்றுசொல்லுதன்கிளையில் ஆண்குழந்தை ஆகும்
நலம்பெறலாம் அதனாலேமகிழ்ச்சிஉண்டு
கண்டுசொல்லுஐயைந்துநாளைக்குள்ளே
கனிவானசொல்கேட்கக்கருதலாமே. ௫௰

பூராடத்தின்பலாபலன்.

(௧௯௫) கருதலாம்பூராடம்உதயமானால்
கருத்திலேநினைத்தபொருள்கல்மண் ஆகும்
நிருதமாய் ஊண்பகையே ஆகும் ஆகில்
நேரானஎருவாகும்சாம்பல்ஆகும்

இருநிலமான் அரசுபகையாகநின்றால்
எழும்பியதோர்பறவையுடைஇறகதாகும்
அருமையாம்ஊண்அரசுபகைஇல்லாட்டால்
அப்பனேகல்இலையும்அறியச்சொல்லே. ௫௧

இதுவுமது.

(௧௬௬) சொல்லுவதுநினைத்தபொருள்கூடுவதொன்றில்லை
சோபனங்கள்செய்தாலும்வாழ்வதில்லை
மல்லுவதுபோனவர்கள்வருவதில்லை
மனதிலேநினைத்தபடிநடப்பதில்லை
கொல்லுவதுவிஷதிஷ்டியாலேமக்காள்
கூடிவறப்போறதில்லைநினைத்ததெல்லாம்
அல்லுவதுஆறெட்டுநாளைக்குள்ளே
அப்பனேஇப்பலனேஅறிவாய்த்தானே. ௫௨

உத்திராடத்தின் பலாபலன்.

(௧௬௭) அறிவாயேஉத்திராடம்உதயம்ஆனால்
அன்பாகநெஞ்சில்ஒன்றும்நினைத்ததில்லை
சரியானஊண்பகைதான்இருந்தால்என்ன
தரணிதனில்அரசுபகைஆனால்என்ன
திருதாகநெஞ்சதனைச்சோதிக்கஎண்ணிக்
கேட்டதல்லாற்கேட்டதிலோர்பொருளுங்காணேன்
இருநிலத்தில்இப்பலனைஎண்ணிப்பாரு
எளிதாகத்தோணும்இதைஇசைத்திடாயே. ௫௩

இதுவுமது.

(௧௬௮) இசைந்துபார்நினைத்ததொன்றும்இல்லைஇல்லை
இனிதாகச்சோதிப்போம்நாம்என்றெண்ணி
விசைந்துதான்வினவனின்றதல்லால்மைந்தா
வேறேதும்இல்லைபடாவெளிவிட்டோம்பார்
வசைத்துதான்இப்படியாகச்சோதித்து
மறுபடியும்கேட்பம்என்றுவந்தாய்என்றும்
உசத்திஇல்லைஅதற்கொருநாள்ஆகும்என்றும்
உரைத்தவனைஒட்டிவிடுஉறுதிதானே. ௫௪

திருவோணத்தின் பலாபலன்.

(௧௬௯) உறுதியென்றதிருவோணம்உதயம்ஆனால்
உன்மனதில்நினைத்தபொருள்நெல்லும்புல்லும்
கருதுகின்றஊண்பகையேஆகும்ஆகில்
கலந்துசொல்லுகண்டுமனந்தேறிதான்

பருதியென்ற அரசுபகையாகநின்றால்
பதறாமல் அதில்தணிந்தவரைக்காட்டு
சுருதியென்ற ஊண் அரசுபகை இல்லாவிட்டால்
சொல்லுவாய்உயர்ந்ததனைச்சொல்லுவாயே. ருரு

இதுவுமது.

(கஎ0) சொல்லுவாய்நினைத்தபொருள்மங்களங்கள்கூடும்
சோரனாய்ப்பயம்உண்டுபொருள் உடைமைபோகும்
அல்லுவாய்பொன்பொருள்கைவசமேஆகும்
அப்பனே துலைதூரம்போனார்மீள்வார்
வெல்லுவாய்பகைஉறவாய்வந்துகூடும்
மேலானஜாதியிலேஉறவுசேரும்
நல்லுவாய்எழுமூன்றுநாளைக்குள்ளே
நடந்துவரும்இப்பலனைநாடிப்பாரே. ருசு

அவிட்டத்தின் பலாபலன்.

(கஎக) நாடிப்பார் அவிட்டம் அங்கே உதயம் ஆகும்
நலமானநினைத்ததெல்லாம்விளங்குஞ்சோதி
தேடிப்பார்ஊண்பகைஆகும்ஆகில்
சென்றதொருநாணயத்தில்தணிவுசொல்லு
ஓடிப்பார்அரசுபகையாகநின்றால்
உத்தமனே அதில்தணிந்தநாணயமே ஆகும்
கூடிப்பார்ஊண் அரசுபகைஇல்லாவிட்டால்
துகைஉயர்ந்தநாணயமாய்ச்சொல்லுசொல்லே. ருஎ

இதுவுமது.

(கஎஉ) சொல்லுவாய்பொருள்உடைமைகைவசமேசேரும்
சோபனங்கள்உரன்முறையார்தொந்தமாகும்
வெல்லுவாய்பிறதேசம்போனபேர்கள்
வேணபடிசெல்வர்களாய்வந்துசேர்வார்
மல்லுவாய்பிறமனிதர்உதவியாலே
வந்திடுமேபால்பழவர்க்கங்கள்மைந்தா
வெல்லுவாய்ஆறைந்துநாளைக்குள்ளே
வேணபடிபொருள்வரத்துவிளையும்பாரே. ருஅ

சதயத்தின்பலாபலன்.

(கஎங) பொருள்வருமேசதயம் அங்கேஉதயம்ஆனால்
புந்தியினில்நினைத்தபொருள்பயிருபச்சை
இருள்வருமேஊண்பகையே ஆகும்ஆகில்
எண்ணியதோர்வர்க்கத்தில்தணிவுமாகும்

அருளனெனும் அரசுபகையாகநின்ருல்
அதிற்குறைந்தவர்க்கவகை அறிந்துகொள்ளு
சருவுமொருஊண் அரசுபகை இல்லாவிட்டால்
தணிந்தவிலை இல்லையடா சார்ந்துபாரே. ருசு

இதுவுமது.

(கஎச) சார்ந்துபார்பொருள்வரத்தே அதிகம் இல்லை
சஞ்சலங்கள் என்றும் இல்லை தணிவும் இல்லை
நேர்ந்துபார்போனவர்கள் துயரத்தாலே
நிருவகிக்கமாட்டாமற்பிணியால்நொந்து
கூர்ந்துபார்கைப்பொருளும்சேதமாக்க
கூடிஉறவாய்இருந்தோர்பகையதாகி
நேர்ந்துபார்வழுஞ்சுநாளைக்குள்ளே
திரும்பிடுவார்இப்பலனைத்தெளிந்துபாரே, சுஙு

பூரட்டாதியின்பலாபலன்.

(கஎரு) தெளிவானபூரட்டாதிஉதயமானல்
சிந்தைதனில்நினைத்தபொருள் ஊரும்பூச்சி
வழியானஊண்பகையே ஆகும்நாளில்
மன்னவனெசிறுபூச்சிஎன்றுசொல்லு
கொழுவானஅரசுபகையாகநின்ருல்
கொடுமையுள்ளபூச்சென்றேகூறலாகும்
தழுவானஊண் அரசுபகை இல்லாவிட்டால்
தண்மையுள்ளபூச்சாகச்சொல்லுவாயே. சுக

இதுவுமது.

(கஎசு) சொல்லுவாய்செலவதிகம்வரவுகொஞ்சம்
தொடுத்தகொருவியாச்சியமும்தோல்வியாகும்
மல்லுவாய்ஊர்வழிநான்போனபேர்கள்
வழக்கிலேதோல்வியாய்இடைஞ்சல்உண்டாம்
வெல்லவேபொருளுடமைகளவுபோகும்
வேந்தனல்தணடனைகள்வருமேபாரு
அல்லவேமூணுபத்துநாளைக்குள்ளே
அப்பனேஇப்பலனும் அறிந்துகொள்ளே. சுஉ

உத்திரட்டாதியின்பலாபலன்.

(கஎஎ) கொள்ளுவதுஉத்திரட்டாதிஉதயமானல்
கூடுதனில்நினைத்தபொருள்குளிர்ந்தபச்சை
எள்ளுவதுஊண்பகையே ஆகும் ஆகில்
எண்ணியதோர் அழுக்குள்ளபச்சையாகும்
துள்ளுவகு அரசுபகையாகநின்ருல்
துடியானகறுப்புள்ளபச்சையாகும்
தள்ளுவதுஊண் அரசுபகை இல்லாட்டால்
சாற்றியதோர்குளிர்ந்தபச்சையாகும்காணே. சுங

இதுவுமது.

(௧௭௮) காணுமேசிலகுசண்டைகளவுபோகும்
கள்ளரால்பயமுண்டுகனிந்தஉறவில்லை
வேணுமொருசம்பந்தம்பகையதாகும்
மேலானபிரபுவினால்சல்லியங்களுண்டு
ஆணுமேபோனவுயிர்திரும்பாதையா
அப்பனேஅதனாலேபொருளுடைமைதோல்வி
தோணுமேஎண்ணைஞ்சுநாளைக்குள்ளே
தொடுத்திடுங்கால்இப்பலனைச்சொல்லுவாயே. ௬௪

இரேவதியின்பலாபலன்.

(௧௭௯) சொல்லுவாய்இரேவதிதான்உதயமானால்
தொடுத்தபொருள்முத்துவகையென்றுசொல்லு
வெல்லுவாய்ஊணபகையே ஆகும்ஆகில்
விலைதணிந்தரத்னவகை ஆகவேணும்
மல்லுவாய்அரசுபகையாகநின்றால்
வசமில்லைசொட்டையென்றுவகுத்துச்சொல்லு
சொல்லுவாய்ஊண்அரசுபகைஇல்லாட்டால்
தொகைஉயர்ந்தவர்க்கமென்றுதொகுத்திடாயே. ௬௫

இதுவுமது.

(௧௮௦) தொகுத்திடுவாய்பொருள்வரத்தோமெத்தவுண்டு
சோபனங்கள்கூடும்அப்பாசொல்லக்கூடா
வகுத்திடுவாய்போனவர்கள்மணமாய்வந்து
வாழ்ந்திருப்பார்இனத்துடனேமகிழ்ச்சியாக
அகத்திடுவாய்இரண்டுபிள்ளைமிகுந்தசெல்வம்
அவன்கிளையும்பெருகிவளர்ந்தோங்கும்பாரு
நிகழ்த்திடுவாய்நினைத்ததெல்லாம்கைவசமேசேரும்
நேரானஅறுமூன்றுநாள்தான்பாரே. ௬௬

சிந்தைதனைகூறுதலின்யுக்தி.

(௧௮௧) பாரடாநின்றநிலைபரிந்துபாரு
பதிவாசமுகம்நோக்கும்திசையும்பாரு
நேரடாமுன்சொன்னஎழுத்தோடெல்லாம்
நினைவுதடுமாறாமல்நிறுத்திக்கொண்டு
சேரடாநட்சத்திரம்சொல்லக்கண்டு
திகையாமற்சொன்னபடிநெறிந்துணர்ந்து
மாறடாமவுனம்என்றஎழுத்தைஓது
மகத்தானசோதியத்தும்பிறப்பும்சொல்லே. ௬௭

சிந்தனைப்படலம்-முற்றிற்று.



# ஜாதகப்படலம்.

### ஊண்முதல்விநாடியின்பலன்.

(கஅஉ) சொல்லுகிறேன் ஊணதிலேமுதல்விநாடி
துலங்குகின்றகுழந்தையதுபிறந்தானால்
அல்லல்என்பதொன்றும்இல்லைசுகமாய்வாழும்
அப்பனேவயதிலனுக்கறுபத்தஞ்சம்
கல்லல்என்றபிணிஇல்லைதுன்பம்இல்லை
கவடில்லைவஞ்சகம்எக்காலும்இல்லை
நல்லபுகழ்வுடையவனும்ஆயுள்மட்டும்
நானிலத்தில்வாழ்ந்திருப்பான்நன்மையாமே க

### ஊண்-உ-ஆம் விநாடியின்பலன்.

(கஅங) நன்மையென்றஇரண்டாம்விநாடிதன்னில்
நன்றுமெத்தஉம்பனத்தில்நலமேஆகும்
வண்மையென்றபூமியும்கைவசமாய்ச்சேரும்
வாழ்ந்திருப்பர்அறுபதுவாம்வயதுமட்டும்
செம்மையென்றசிரமும்சிரமும்மெத்த
தேகம்உள்ளமட்டும்ஒருபிணியேஇல்லை
தன்மையென்றதாய்தந்தைபிறப்பிற்சேதம்
சத்துருமில்லைசுகமாகவாழும்பாரே. உ

### ஊண்-ங-ஆம் விநாடியின்பலன்.

(கஅச) வாழுமேமூன்றாம்விநாடிதன்னில்
மக்களேமதலைபதுஉதித்தானால்
கேளுமேவயசதுதான்அன்பதாகும்
கெர்ப்பம்முதல்வயதுபதினைந்துமட்டும்
கேளுமேபிணிகள்உண்டாம்சுகமோகொஞ்சம்
குலையத்தில்அதிகசுகம்இல்லைபாரு
தாளுமேகூடிவரமாட்டாதப்பா
சஞ்சலமும்சுகமதுவும்சரிதான்பாரே. ங

### ஊண்-ச-ஆம் விநாடியின்பலன்.

(கஅரு) சரியானவினாடிஅங்கேநாலதாகித்
தான்பிறந்தால்வயசதுதான்நாற்பத்தொன்று
குறியானசடலமதுஉள்ளமட்டும்
கொண்டிடும்ஓர்மனம்இல்லைவாழ்வுமில்லை
விரிவானபொருள்இல்லைபோகம்இல்லை
வேந்தன்உறவொருநாளும்விருப்புவதேஇல்லை

நரையானபிறகே ளைப்பொசிப்பதில்லை
நன்மைஇல்லைதிமைஇல்லைநாடிப்பாரே. ஞ

உதன-ரு-ம்-விநாடியின்பலன்.

(கஅசு) நாடிப்பார்ஐந்தாம்விநாடிதன்னில்
நலமாகப்பிள்ளையதுபிறக்கும்ஆகில்
தேடிப்பார்வயசதற்குமுப்பத்தேழு
செம்மையுடன்வசிகரமாய்இருக்கும்பாரு
கூடிப்பார்சிநேகிதமோஉயிரொன்றாகும்
குணமதுதான்சற்குணமாய்இருக்கும்பாரு
வாடிப்போம்பொருளுடமைஇல்லாமல்தான்
மனத்துயரம்விளைக்கும்வருத்தும்பாரே. ஹ

ஆதானபலன்.

(கஅஎ) பாரடாவிக்கதுதான்பாயும்போது
பண்பானசூரியகலைநடக்கும்ஆகில்
ஆரடாஆணாகும்சந்திரகலையாகில்
அப்பனேபெண்ணாகும்அறிந்துபாரு
சாரடாசுழிமுனையில்தரிப்பில்லை
தரித்தாலும்அதுபிழைக்கமாட்டாதப்பா
கூரடாசாஸ்திரங்கள்யாவும்பார்த்து
குணக்குறிகள்தவறாமல்குறிசொன்னேனே. ஸ

நடைமுதல்விநாடியின்பலன்.

(கஅஅ) சொன்னேனேநடையிலேமுதல்விநாடி
தொல்புவியில்பிள்ளைகள்தான்தோன்றும்ஆகில்
அன்னவனுக்காயசுதான்அம்பதாகும்
அதுதரித்தநாள்முதலாய்சுகமேஇல்லை
பின்னதுகேள்வயசுமுப்பதுக்குமேலே
பிரபலமும்அதிகம்இல்லைவாழ்வுகொஞ்சம்
தன்னாலேவருவதல்லால்உதவியில்லை
சடம்உள்ளவனாயினும்பொய்கோள்சொல்வானே. எ

நடை-உ-ம் விநாடியின்பலன்.

(கஅகூ) சொல்லவேநடைஇரண்டாம்விநாடிதன்னில்
தோன்றினோன்அவன்வயதுஐம்பதைந்து
கொல்லுவான்சீவசெந்துஅதிகம்ஆக
கொடுமையுள்ளபொய்களவுவஞ்சம்மெத்த

ம

Sequence of pages changes from this page

தன்றுவான் இனச்சேர்க்கைசற்றும்இல்லை
சண்டாளன்என்கிறபேர்லபிக்குமையா
துன்றுவான்எனக்கெதிர்தான்இல்லையென்று
சொல்லுவான்பிறர்அவன்சொல்தன்றலவே. அ

நடை-ங-ம் விநாடியின்பலன்.

(ககூ0)தள்ளவேநடைதனிலேமூன்றும்விநாடி
தான்பிறந்தால்வயசதுதான்முப்பத்தேழு
கொள்ளவேவயசதுதான்உள்ளபட்டும்
கொலைகளவுபொய்சூதுகொடுமைமெத்த
டல்லவேபிரமலபிஉள்ளமட்டும்
வருத்தும்வெகுநோயாலேவருந்துவான்பார்
பல்லவேநல்லருசியுள்ளதெல்லாம்
பண்புடனேஅவன்வாயில்படாதுபாரே. கூ

நடை-ச-ம் விநாடியின்பலன்.

(ககூக)படாதுநடைநான்காம்விநாடிதன்னில்
பதிவாகஉற்பதியேஆகும்ஆகில்
கடவாதுவயசதுதான்இருபத்தொன்று
கல்வியுமோமெத்தவுண்டுகளவும்உண்டு
சடியாதுபெரியோரைத்தூஷணிப்பான்
சண்டாளப்பிறவியிவன்ஒருவர்க்கஞ்சான்
தொடர்வானஅன்னவஸ்திரம்சுகமும்இல்லை
துர்ச்சனன்காண்இவன்நல்லவழியில்லானே. ம0

நடை-ரு-ம் விநாடியின்பலன்.

(ககூஉ)வழியதனில்ஐந்தாம்விநாடிதன்னில்
மைந்தனும்உற்பவித்துவந்தான்ஆகில்
செளிவுள்ளவயசதுதான்பதினெட்டாகும்
நினைவுதப்பிப்பித்தவெறிகொண்டுபேசும்
பழியுடையன்பிறர்க்குதவிசற்றும்இல்லை
பண்பில்லான்சனத்துடனேவாசம்செய்யான்
களியுள்ளஇனந்தனிலேஇருந்துவாழான்
கசடனப்பாநற்குணங்கள்இல்லைந்தானே. மக

ஆரசுமுதல் விநாடியின் பலன்.

(௧௯௩) தானென்ற அரசிலேமுதல்விநாடி
தான்பிறந்தான் தன்வயதுநூற்றெழு
பானென்றபவிஷு உண்டு பாக்கியம் உண்டு
பால் உண்டு கிளை உண்டு பெணியும் உண்டு
தேனென்றசொல் உண்டு ஜெகமெல்லாந்தான்
சென்றுவரநடையில்லேஜெகத்தில் உள்ள
மானென்றவிழிமடவார்மயங்குவார்பார்
மக்களை அவன்வாழ்வைமதிக்கொண்ணாதே. ம௨

ஆரசு-௨-ஆம் விநாடியின்பலன்.

(௧௯௪) ஒன்றுதே அரசிரண்டாம்விநாடிதன்னில்
உற்பவித்தால்வயசதுதான்தொண்ணூற்றைந்து
என்றுதகைபோகம்சொல்லொண்ணாது
இன்பம் உள்ளவாழ்க்கையென்றால்மதிக்கொண்ணாது
தன்றலேஞானநிலைநிலைக்கும்அப்பா
தன்மைஉள்ளபுருஷன்என்பர்தரணியோர்கள்
சொன்னதொரு அவனுடையகீர்த்தியென்றால்
சொல்லுதற்குவாயில்லைசொன்னேம்பாரே. ம௩

ஆரசு-௩-ஆம் விநாடியின்பலன்.

(௧௯௫) சொல்லுமொருஅரசுமூன்றாம்விநாடிதன்னில்
தோன்றுவரேல்அவன்வயதுஎண்பத்தாறு
வெல்லும்அவன்வாழ்வைஎன்றால்மதிக்கொண்ணாது
வெகுபோகம்வெகுசுகங்கள்உண்டுபாரு
அல்லவேசரீரத்தில்பீடைஇல்லை
அவன்பவிஷுஅளவிடக்கூடாதுமைந்தா
சொல்லவேஅஷ்டசித்திஅவர்க்கேசித்தி
சொல்லவுமேகூடாதுசுகத்தைத்தானே. ம௪

ஆரசு-௪-ஆம் விநாடியின்பலன்.

(௧௯௬) தானென்றஅரசுநான்காம்விநாடிதன்னில்
தான்உதித்தால்வயசதுதான்எழுபத்தெட்டு
தேனென்றமொழியுடையோன்சேகரங்கள்உள்ளோன்
தீமையென்றசொல்ஒருக்காலுஞ்சொல்லான்
வானென்றகுணம்உள்ளான்அறிவதுள்ளான்
மகத்தானபெரியோரைவணங்கிநிற்பான்

கோனென்றசிவகளையும்உள்ளோன்ஐயா
கொடுமைஉள்ளவஞ்சகனைச்சேரொண்ணுனே. மரு

அரசு-கூ-ஆம் விநாடியின்பலன்.

(கசஎ) ஒண்ணுகஅரசைந்தாம்விநாடிதன்னில்
உதித்தவனுக்கேபிரமன்விதித்தகந்நாள்
எண்ணுகஅறுபத்தேழ்ஆகும்மைந்தா
என்சொலவேன்இவன்பெருமைஇயம்பொண்ணுது
துண்ணுகஅன்னைசுற்றம்கிளைஉண்டாகும்
தொடுத்திடுமேபூமிதனிற்செல்வம்உண்டாம்
வண்மையுடன்வாழும்இவன்குடித்தான்அப்பா
மனமகிழ்ச்சிமெத்தவுண்டுமகிழ்கொண்ணுதே. மசு

சித்திரைமுதல் விநாடியின்பலன்.

(கசஅ) ஒண்ணுகஉரக்கத்தில்முதல்விநாடி
உத்தமனேஉதித்தவென்னில்வயதேழஞ்சாம்
விண்ணுனபாக்கியமோஇல்லைஇல்லை
வீணுனதுயரமதுமெத்தவுண்டு
கண்ணுனநோயதுவும்உண்டுபாரு
கலங்கும்அடாஅவன்மனதுசுகமோகொஞ்சம்
தன்னுலேவிதிஅமைப்பும்உள்ளமட்டும்
தலைமீதுசுமைசுமைப்பன்திண்ணம்தானே. மஎ

சித்திரை-உ-ஆம் விநாடியின்பலன்.

(கசகூ) திண்ணமாம்துயில்இரண்டாம்விநாடிதன்னில்
செனித்திட்டோன்தன்வயதுஇருபத்தேழு
கன்னம்இடும்களவுகளும்கொலையும்செய்வான்
கண்டவரால்துஷ்டன்எனத்திரிவன்கண்டாய்
வண்ணமுறும்மனைவியுமேசேர்வதில்லை
மகத்தானபாவியென்றுஉலகம்அஞ்சும்
எண்ணமுறும்துயரம்உயிர்உள்ளமட்டும்
இருக்கும்இதுசிவன்செயலாம்என்றுபாரே. மஅ

சித்திரை-௩-ஆம் விநாடியின்பலன்.

(உய) பாரேநீஉறக்கம்மூன்றும்விநாடி
பாரில்உதித்தான்வயதுஎழுமூன்றுகும்
தேடேநீதேரையைப்போல்திரைந்துபோகும்
சேடம்அதுதான்உள்ளமட்டும்துன்பம்சேர்

காரேநீதாய்தந்தைஉறவும்இல்லை
கண்டவர்கள்இவனுடனேகலந்துபேசார்
வாரேநீதேசம்விட்டுதேசம்போக
மனந்துணிந்துஅவிடம்போய்மாளுவானே. ௰௯

சித்திரை-௪-ஆம் விநாடியின்பலன்.

(௨௱௧) மாளுவான்உறக்கம்நான்காம்விநாடி
வந்துதித்தோன்தன்வயதுபதினமூன்றாகும்
மாளுவான்அக்குடியிற்பிறந்தாவலென்ன
வருந்துவார்இவன்உயிர்தான்மாளும்மட்டும்
தேளானபிணியாளன்துயரம்மெத்த
தெளிமைஉள்ளவாய்க்குருசிகொளவொட்டாது
நாளானநாளுக்குநாள்தான்அப்பா
நலங்குவான்சுகம்என்பதில்லைபாரே. ௨௰

சித்திரை-௫-ஆம் விநாடியின்பலன்.

(௨௱௨) இல்லைஎன்றஇதர்கிளப்பம்உறக்கந்தன்னில்
இயம்பும்ஐந்தாம்விநாடியினில்வந்துதித்தோன்
தொல்லைஎன்றவயதுகொஞ்சம்நான்பதேகாண்
சுகமதுதான்ஒன்றும்இல்லைபிணியோமிச்சம்
கல்லல்என்றசடலமதுபறக்கும்பாரு
கண்டவர்கள்விதிப்பயனோஎன்றுசொல்வார்
சுள்ளியிலேசுழலவிட்டபாண்டம்போல
சுழலுவான்மாளுமட்டும்சுகம்இல்லானே ௨௧

இதுவுமது.

(௨௱௩) சுகம்என்பதொருபோதும்இல்லைஇல்லை
சுழித்தவொருகாற்றினிலேதுரும்புபோல
அகமதிலேஒருபோதும்வாழ்வதில்லை
அவன்வாழ்வுநன்மையாய்இருப்பதில்லை
செகமதிலேபிணியாளன்போலேமக்காள்
செடம்அழிவதல்லாமல்திடமேஇல்லை
பகைவருவதல்லாதுஉறவுஇல்லை
பாழானஉறக்கம்அந்தினபலன்தான்பாரே. ௨௨

மரணம்முதல் விநாடியின்பலன்.

(௨௱௪) பாரப்பாமரணத்தின்முதல்விநாடி
பண்பானநேரத்தில்பிறந்தான்ஆகில்
வாரப்பாவயதுகொஞ்சம்பனிரண்டாகும்

மக்களொதாய்தந்தைசேதம்ஆகும்
காரப்பா அவன்உடலதான்நோவுகொள்ளும்
கடைத்தேறல்ருநாளும்இல்லை இல்லை
சாரப்பா அவன்சடலம்மடியும்போதில்
தனியனாய்இவன்இருந்துஇறப்பான்தானே. ௨௩

மரணம்-௨-ஆம் விநாடியின்பலன்.

(௨௱௫) இறந்துபோய்மரணம்ரெண்டாம்விநாடிதன்னில்
இனிதானஉற்பத்திஆகும்ஆகில்
மறந்துபோம்அவன்வயதுஒன்பதுக்கும்
மரணமதுபோல்துடித்துமாய்வான்நோயில்
குறைந்திடாநாளுக்குநாள்தான்அப்பா
குணம்ஆகமாட்டாதுகொடுமைமெத்த
நிறைந்துபோம்சடலமதுசெத்தால்நன்று
செகந்தனிலேஎன்றுலகம்சொல்லும்பாரே. ௨௪

மரணம்-௩-ஆம் விநாடியின்பலன்.

(௨௱௬) சொல்லுவதுமரணம்மூன்றாம்விநாடி
தோன்றிட்டால்அவன்வயதுஏழதாகும்
மல்லுவதுநோயதுதான்மெத்தவுண்டு
மரணம்போல்வந்துபின்புதெளிவுண்டாகும்
தொல்லுலகில்இன்னொருக்கால்இதுபோல்வந்து
சூழுமடாசெப்பும்இந்தத்தும்கேறி
அல்லுவதுமேல்உரைத்தவயதில்மைந்தா
அந்தகனால்உயிர்ச்சேதம்ஆகும்பாரே. ௨௫

மரணம்-௪-ஆம் விநாடியின்பலன்.

(௨௱௭) ஆகுமேமரணம்நான்காம்விநாடி
அவனியில்வந்துதித்தவர்க்குவருஷம்ஒன்றாம்
சாகும்அந்தநாளவும்இவன்தான்அப்பா
தனிவெயிலிற்புழுவதுதான்தவிப்பதேபோல்
வேகும்வெகுவியாதிகளால்மடிந்துநொந்து
வீணாகஅழிவதல்லால்சுகமதுண்டோ
சாகும்மரணத்துதித்தேதோதென்னில்
தான்முன்புகரித்ததுகான்சுழினை ஆமே. ௨௬

மரணம்-இ-ஆம் விநாடியின்பலன்.

(உ௱அ) ஆமென்றமரணஐந்தாம்விநாடிதன்னில்
அப்பனைக்குழந்தை அவதரிக்கும் ஆகில்
பேரமென்ற இக்குழந்தைதனக்குவேந்தன்
பொறித்திட்டவிதிவொன்றுசம்புகலக்கேளு
தாமென்றதாய் அலறதந்தைசோக
சகோதரர்கள்பொருமிஅழுத்தலையேசாய்த்து
ஏமென்றஆறுதிங்கள்தனிலேபோயும்
இவன்தரித்ததவ்வேளைகழியாமே. உஎ

மரணப்பேற்றின்சத்துருமித்துருபலன்.

(உ௱கூ) சுழினைதனில்மித்ருவதோகநின்றால்
சொன்னபடிசரிஆகும்சத்ருவாகில்
அழிவுள்ளமரம்போல்மாளும்மட்டும்
அலைந்துவிடும்வெகுகொடுமைசடலம்சோரும்
எழில்அற்றஉயிரதுதான்தவிப்பானையோ
என்னசொல்வேன்சத்துருதானிதிலழிப்பன்
சுழன்றலையும்பாய்மரத்தில்பட்டபோலே
தொல்பிணிகள்வந்துதுன்பம்செய்யும்பாரே. உஅ

இதுவுமது.

(உ௱௰) செய்பவேபொருள்வரத்துஇல்லைஇல்லை
ஜெயமானமணம்இல்லைசேர்க்கைஇல்லை
வையமேஉலகம்எல்லாம்வம்பன்என்று
மனைவிமக்கள்உறன்முறையார்மருவல்இல்லை
நொய்யதொருநோயாலேவருத்தம்மெத்த
நுவலும்அந்நோயதனால்மெலியும்சீவன்
கொய்புமொருசத்துருவின்பகைபொல்லாது
கொடுமைஉள்ளமரணந்திற்பிறக்கொண்ணாதே. உகூ

இதுவுமது.

(உகக) பிறக்குமிதிற்சத்துருதான்அரசன்ஆகில்
பிண்டத்தில்மாண்டுவிழுமுவணதாகில்
சிறக்கவேபதினொந்நாளைக்குள்ளே
செற்றுவிழுந்தப்பில்லைஜெகத்திலைமைந்தா
உறக்கவேமாதம்ஆறுமூன்னுக்குள்ளே
ஒழிந்துபோம்வணதுதான்மித்ருஆகில்

பறக்கவேமாசம் ஒருஐந்துக்குள்ளே
பதிக்கரசன்உயிர்ச்சேதம்செய்வான்பாரே. ௯௰

நித்திரைப்பேற்றின் சத்துருமித்துருபலன்.

(௨௧௨) செய்திடுநான்உறக்கத்தில்மித்துருஅரசாகில்
செனனத்தில்பிரமலிபிஉரைத்ததுமுன்சரியே
எய்திடுவான்சத்ருஅரசாகினின்றால்
என்னசொல்வேன்வெகுநோயால்துன்பமாவன்
வைதிடுவான்வருமானம்என்றும் இல்லை
மணம்இல்லைப்ரபுத்தையும்மகிழ்ச்சிஇல்லை
கொய்திடுவரன்பிறந்தாறுதிங்களுக்குள்
குவலயத்தில்வாழ்வதில்லைதிண்ணமாமே. ௯௧

அரசுப்பேற்றின் சத்துருமித்துருபலன்.

(௨௧௩) திண்ணமென்றஅரசனுக்குசத்ருஇல்லைச்
செயலாகும்ஜெகந்தனிலேதொடுத்ததெல்லாம்
வண்ணமென்றமனமகிழ்ச்சிவரத்துமெத்த
மனைவிமக்கள்வுரன்முறையார்பிறர்உதவிமெத்த
எண்ணமென்றதுயரமென்னமேவா இல்லை
ஏழையென்றசொல்இல்லைஎவதிவன்தொழிலாம
அண்மையென்றநகளஞ்சியமென்றியாவருமபூசிப்பார்
அப்பனேஇவர்க்கிணைதான்சொலக்கூடாதே. ௯௨

நடைப்பேற்றின் சத்துருமித்துருபலன்

(௨௧௪) கூடாதுநடையினில்மித்துருஉன்னஆகல்
கூறியதோர்லிபினக்குக்கால்அதிகமாகும்
நாடாதுமித்துருவேஅரசனாகில்
நாட்டியதோர்பிரம்மலிபிக்காஅதிகமாகும்
கேடாதசத்துருஊணாகநின்றால்
செப்பும்அதில்கால்வரிசைசெல்லாய்ப்போகும்
வாடாதசத்துருத்தான்அரசனாகில்
வழுத்தியதோர்லிபியில்அரைகுறையும்பாரே. ௯௩

இதுவுமது.

(௨௧௫) குறைபானவயதேழுக்குள்ளேமைந்தா
குறைத்திடுவான்கைகாலிற்குற்றம்வரும்படியாய்
குறைபானஇவன்பிறந்துபதினேந்துக்குள்
சிரசுமுதல்கண்காதுமூக்குகட்டில்

குறை ஆகும்மூன்றுபத்துவயதுக்குள்ளே
கூர்மைஉள்ளதேகத்தில்குறைவுசெய்வாள்
கறைஆகும்பிரமலிபிஉள்ளமட்டும்
கணக்கில்லாநோயில்அழுந்துவன்கண்டாயே. ௩௪

இதுவுமது.

(௨௧௬) அழுந்துவதுசத்துருவின்பகைஆகாது
அப்பனைவிந்துஅநுதரித்தநேரம்
கொழுந்துவிட்டெழுந்தஅனல்போலேமக்காள்
குடிகெடுத்தசத்துருவும்நின்றதாலே
தழைந்ததொருசுழிமுனைஅங்கிருந்ததாலே
சண்டாளசத்ருபகைஆனதாலே
தெளிந்துவிடும்சூரியன்சந்திரனைவிட்டு
நேராமற்போனதினால்பகையாம்பாரே. ௩௫

ஊண்பேற்றின் சத்துருமித்துருபலன்.

(௨௧௭) பகையானஊண் அதிலேமித்ருவலிதாகில்
பாடினதுபொய்யாதுபலிக்கும்பாரு
தொகையானசத்ருஅங்கேஅரசாய்நின்றால்
துலங்கவுமேமிஞ்சலொட்டான்குறையலொட்டான்
தகையாகவருங்காரியம்தவிர்த்துவைப்பான்
சண்டாளசத்துருதான்தாழ்ந்துபோகான்
வகையானதேகத்தில்பீடைகொஞ்சம்
வருத்தம்வரும்வந்தாலும்வலுச்செய்யாதே. ௩௬

இதுவுமது.

(௨௧௮) வலுவானஅரசுமித்துருவேஆனால்
மக்களேபிரமலிபிஅனைஅதிகம்ஆகும்
நலியானதேகத்தில்நலிவேஇல்லை
நன்மைஎன்றமணம்போகம்வாழ்வுமிச்சம்
கொலுவாகப்பூமிஇனம்பலிக்கும்பாரு
கொண்டுவிற்கும்வியாபாரம்குணமதாகும்.
வலுவானமன்னர்உறவாகும்மேலும்
மக்களேஅதிகபலன்பருகும்பாரே. ௩௭

இதுவுமது.

(௨௧௯) பாரடாபட்சிவலுஅறியவேண்டும்
பகையானஎழுத்தைவிட்டுமாறவேண்டும்

கோறுவதுஎவ்வேளைஅவ்வேளைக்குக்
குடிகெடுத்தசத்துருவைவிலக்கிப்போடு
நேரும்ஒருபட்சிவகைஆனபேரை
நினைவில்வைத்துஅவருடனேபோகவேண்டும்
சேருவதுபட்சியுறவானபேரைச்
சேர்ந்ததினால்நன்மைஉண்டுதிண்ணம்தானே. ௱௮

## ஆயுட்பிரமாணம்.

(௨௨௰) தான்என்றபிறப்புக்குவயதுசொல்வேன்
தன்மைஉள்ளஊணுக்குஎழுபதாகும்
மான்என்றநடைதனக்குவயதோமைந்தா
மறையவன்தான்லிபித்தபடிஅன்பதாகும்
தேன்என்றஅரசுக்குவயதுமெத்த
செப்பவென்றால்நூற்றுப்பத்திருந்துவாழ்வான்
கோன்என்றஉறக்கத்தின்வயதுகொஞ்சம்
குரைவானஏழைந்துவயதாம்பாரே. ௱௬

## இதுவுமது.

(௨௨௧) வயசுகொஞ்சம்மரணத்தின்வயசுகேளு
மக்களேபதினைந்துவருஷம்ஆகும்
பயன்உடையஅரசுபகைஆகாதப்பா
பண்பானஇதற்கதிகம்இல்லைஇல்லை
அயன்என்னும்தந்தைஅன்றுசேர்ந்தநேரம்
அந்தியமாய்ச்சுழிமுனைகாண்தான்முடிந்தநேரம்
வயசதுவேஅற்றுவிடும்சனிஇவன்தான்மைந்தா
மருவிமணம்செயும்நேரம்நோய்வரும்ஊண்கேளே, ௯௰

ஜாதகப்படலம்-முற்றிற்று.



பொதுவிதி

# பிணிப்படலம்.



## பிணிகொண்டஊணின்காலபலன்.

(௨௨௨) ஊண்என்றபிருதிவியின்வியாதிகண்டால்
உத்தமனேமூவைந்துநாளையிலேதீரும்
தேன்என்றவிநாயகர்க்குஅபிஷேகித்துத்
தூபதீபம்கொடுத்துதியானஞ்செய்து

வான்என்றமருந்திதல்செய்வீர் ஆகில்
மக்களோபிராமணர்க்குஅன்னதானம்
கோன்என்றலுருமனதாய்ச்செய்யும்போது
கொடுமைஉள்ளபீடையும்தான்விலகும்பாரே. ௧

பிணிகொண்டகடையின் காலபலன்.

(௨௨௩) விலகுமேகடைதனிலேவியாதிகண்டால்
வியசனம்அதுமிகுதிஉண்டாம்மாதம்ஒன்றில்
நலமாகவேலவர்க்குஅபிஷேகம்செய்து
நங்கையராம்கன்னியர்க்குகளபம்பூசி
பலரும்உண்ணஅன்னம்அதுஅன்பாய்ச்செய்து
பண்டிதர்க்குஉபசாரம்பலவும்செய்து
இலகவேமருந்திதில்செய்வார் ஆனால்
எழும்பியதோர் அப்பில்வந்தபிணிதான்போச்சே. ௨

பிணிகொண்டஅரசின்காலபலன்.

(௨௨௪) போச்சென்றஅரசதனில்வியாதிகண்டால்
புண்ணியனேநாள்எட்டில்தீரும்தீரும்
ஆச்சென்றசிவனுக்குஅபிஷேகம்செய்து
அப்பனேஆரசுபிரதட்சணமேசெய்து
வாச்சென்றநோவினர்க்குமருந்துதானே
வளமாகக்கொடுத்திடவேவிலகும்பீடை
காச்சென்றஅக்கினியால்வந்தபீடை
கலைவதற்குஓமங்கள்செய்திடாயே. ௩

பிணிகொண்டநித்திரையின்காலபலன்.

(௨௨௫) செய்துதான்உறக்கத்தில்வந்தபீடை
தீருவதுமாதம்ஒருமூன்றுக்குள்ளே
கொய்துதான்சடலத்தை நோகப்பண்ணும்
குலவியதோர்காளிக்குஅபிஷேகம்செய்து
வைதுதான்வாயுவினால்வந்ததாலே
மாருதிக்குவடமாலைமகிழ்ந்துசாற்றி
நொய்துதான்வயித்தியன்கைமருந்துஉண்டால்
நொந்துமிகவருத்தம்ஆய்த்தீரும்பாரே. ௪

பிணிகொண்டமரணத்தின்காலபலன்.

(௨௨௬) தீருமோமரணத்தில்வியாதிகண்டால்
திருவதுவெகுவருத்தம்திங்கள்ஆறில்
தேறுமோதேறாதோஎன்பார்கோடி
செய்வினையோதீவினையோஎன்பார்கோடி



ஆறுமாமுகன்செயலேநடக்கும்ஆகில்
அரசுபகைஆவதுதான் இவனுக்கில்லை
சீறும்ஒருபரிகாரம்என்னஎன்னில்
செம்பிரம்ஆம்சனிக்கபிஷேகங்கள்செய்யே. ௫

இதுவுமது.

(௨௨௭) செய்துபார்ஆகாசவெளிஇதாகும்
இடமானஊண்அரசுபகைஆகாது
நெய்துபார்சத்துருவினகொடுமைமெத்த
நெறிஆனமித்துருவே இருக்கவேண்டும்
கொய்துபார்கூத்தனென்றதினமரணநாளும்
கூடியேஇல்லாமல்இருக்கவேணடும்
வைதுபார்இதகளுடைபபகைஆகாது
வந்ததெனறால்உயிர்ச்சேதம்வருகும்பாரே. ௬

பிணிப்படலத்தின்பொதுவிதிசிறப்புவிதி.

உ-ற்குலவரலாறு.

(௨௨அ) ஆகுமேசாமம்அதைக்குறுக்கிநன்றாய்
அப்பனேநாழிகையாய்ப்பிரித்துச்சொன்னோம்
போகுமேவிநாடிஅங்கேவாய்த்ததானால்
புண்ணியனேஒருநாளும்பொய்த்திடாது
ஏகுமேவிநாடிஅதுபிசகிப்போனால்
எடுத்ததொருகாரியங்கள்பிசகும்பாரு
சாகுமேநேரம்அதுபிசகிற்றானால்
சீண்டாளாத்தொழிலுபிசகும்பாரே. ௭

இதுவுமது.

(௨௨௯) பிசகாமல்விநாடிஅங்கேஅறியவேண்டும்
பிணக்கறுக்கசாஸ்திரத்தில்வினையம்வேண்டும்
ஆசையாமல்ஒருமனதாய்நிறுத்தவேண்டும்
அறிவானபுத்தியினால்அறியவேண்டும்
இசையானகுருவின் இடம்கேள்விவேண்டும்
செய்தொழிலும்கைபாகம்தெரியவேண்டும்
வசமானபெரியோர்க்குவணக்கம்செய்தால்
வழிஆனதொழில்செய்யும்வகைசொல்வாரே. அ

சிறப்புவிதி.

பிணிகொண்டஊண்காலமுதல்விநாடியின்பலன்.

(௨௩0) சொல்லவேஊண் முதலாம்விநாடிதன்னில்
தொடர்பிணிதானநாலேந்துநாளிலதிரும்

வெல்லவேகோய் அதுதான் பெலனே இல்லை
வெற்றியாம் அரசுபகை இருக்கொணாது
அல்லவே இவன்பகையிற் பிணிதான் மெத்த
ஐங்கரனார்க்கபிஷேகம்செய்தால் மைந்தா
சல்லியங்கள் தொடுத்துநின்ற பிணிகளாலே
சஞ்சலங்கள் ஒன்றுமில்லை சவுக்கியம் ஆமே. ௬

பிணிகொண்ட ஊண்கால-உ-ஆம்விநாடியின்பலன்.

(உ௬௧) சவுத்தியம் ஆம் ஊண் இரண்டாம்விநாடிதன்னில்
சரீரத்திற்பிணி அதுதான் சாரும் ஆகில்
அவத்தம் இல்லைநாள் எழிற்குணம் அதாகும்
ஐங்கரனார்க்கருச்சனை செய்தடிபணிந்தால்
சிலக்கும் ஒரு அரசுபகை இராதுமைந்தா
திடம்செய்யமாட்டா அவனாலே இல்லை
குவிக்கும் ஒரு பிருதிவியன் கூறுகின்ற
கொள்கையினால் இந்தக்குணம்தான் பாரே. ௭

பிணிகொண்ட ஊண்கால ௩-ம் விநாடியின்பலன்.

(உ௬உ) குணம் ஆன ஊண் மூன்றாம்விநாடிதன்னில்
குறித்தவுடல்வந்தபிணி நாள் ஒன்பானில்
மணம் ஆகத்தீருமே திண்ணம்திண்ணம்
வழிக்கரைவிநாயகர்க்குப்பூசைசெய்தால்
கனம்ஆகாதரசுபகையிருந்தாலும்தான்
கண்டிப்புமெத்த இல்லை அரசிற்பாதி
இனம்ஆன அரசுபகை ஊணில்வலு இல்லை
என்னசெய்வான் கோபம் அதுசெய்யொண்ணாதே. (௭௧)

பிணிகொண்ட ஊண்கால-௪-ஆம்-விநாடியின்பலன்.

(உ௬௩) ஒண்ணுத ஊண் நான்காம்விநாடிதன்னில்
உடலில்வரும்பிணி அதுநாள்பதின்மூன்றுக்குள்
திண்ணமதாய்த்தீர்ந்துவிடும் செப்பினேன்பார்
சித்திவிநாயகர்க்கவலும்கடலைதேங்காய்
வண்ணமாய்ப்பால்பழங்கள்படைத்துமைந்தா
வணக்கமாய்ப்பிராமணோபகாரஞ்செய்தால்

அண்ணல்பகை இருந்தாலும்வலுச்செய்யாது
அப்பனேபிருதிவியின் கூறிதாமே. கஉ

பிணிகொண்டஊண்கால-ரு-ஆம்விநாடியின்பலன்.

(உநச) கூற்றான ஊண் அஞ்சாம்விநாடிதன்னில்
கொண்டபிணிபதினைஞ்சுநாளில்தீரும்
வேற்றான அரசுபகை வேகஞ்செய்யும்
விநாயகர்க்கு அபிஷேகம்செய்துமேலும்
சாற்றியவேதியர்க்கு அன்னதானம்
தன்மையுடன்செய்திடவேதணிந்துபோகும்
பாற்றான ஊண் அதிலேவந்தரோகம்
பரிவானபிரிதிவியைச்சார்ந்ததாமே. கங

பிணிகொண்டநடைக்காலமுதல்விநாடியின்பலன்.

(உநரு) சார்ந்தம்ஆம்நடைதனிலேமுதல்விநாடி
சரீரத்திற்பிணி அதுதான்சாரும் ஆல்ல்
நேர்ந்தபடிசடலத்தைவருத்தம்செய்து
நீங்கும்அடாநாள்பத்தில்பிணியில்லாது
வேந்தன் அவன்பகைத்ததனால்வினையேஇல்லை
மேதினியில்இருவருக்கும்தோழன் ஆகும்
வார்ந்தமயில்வாகனத்தில்ஏறியாடும்
வடிவேலனைத்தொழுதால்வணக்கம்கொண்டே. கச

பிணிகொண்டநடைக்கால-உ-ஆம் விநாடியின்பலன்.

(உநசு) கொள்ளவேநடையிரண்டாம்விநாடிதன்னில்
குறித்தபிணிபதினைஞ்சுநாளில்மைந்தா
தள்ளவேசாந்தம்அதாம்மைந்தாகேளு
தண்ணீரிற்பகைத்ததொருபீடைதானும்
கொள்ளவேகொல்வதில்லைசெந்தூர்வாழும்
குமரகுருசெயல்இரக்கிற்குறைஒன்றில்லை
விள்ளவேதிண்ணம்இதுமுனிவர்சொன்னார்
வேந்தனிடப்பகைபெரிதாம்சொல்வினேனே. கரு

பிணிகொண்டநடைக்கால-ங-ம் விநாடியின்பலன்.

(உநஎ) சொல்லவேநடைமூன்றாம்விநாடிதன்னில்
தோன்றினதோர்பிணி அதுதான் இருபதுக்குள்
சல்லியம்ஆம்பிணியாதேவருத்தம்மெத்த
சண்முகனார்கருணையினால்சாந்தம்ஆகும்

கல்லல் இடும்சத்துருஊன் அரசாகாது
 கலங்காதமனத்தையும்தான்கலங்கச்செய்வான்
தொல்லை இது அப்புவினில் இடை
 தொலைந்துபோம்தாமிசத்தில்துடிசெய்யாதே. ௰௬

பிணிகொண்டநடைக்கால-௪-ம் விநாடியின்பலன்.

(உ௩அ) துடியானநடைநான்காம்விநாடிதன்னில்
 கொடுத்தபிணிநாள் இருபத்தைந்தில்மைந்தா
வடிவானசண்முகத்தின்கிருபையாலே
 வயித்தியத்தாற்சாந்தியதால்தீர்ந்துபோகும்
முடிவானவிந்து அங்கேதரித்தநேரம்
 மொழிகின்றதலைக்கிரகசிதாஷத்தாலே
கடுகியேவந்தபிணிதீரின்கூறும்
 கலம்இடும்சத்துருவின்பகைஆகாதே. ௰௭

பிணிகொண்டநடைக்கால-௫-ம் விநாடியின்பலன்.

(உ௩௯) ஆகாதஐந்தாம்விநாடிதன்னில்
 அப்பனேதேகத்தில்பிணிதான்வந்தால்
போகாது அரசுபகைபுகலொண்ணாது
 போசனத்தின்பகைஅரையிற்பொல்லாதப்பா
நோகாதுநோகும்அடாதேகம்மைந்தா
 நுண்ணிதம்ஆம்மாயம் அதுஒன்றாக்குள்ளே
வேகாதவெந்தல்மேலநீறதாகும்
 வேலவர்க்கு அபிஷேகம்செய்யச்சொல்லே. ௰அ

இதுவுமது.

(உ௪௰) செய்பவேமுருகனிடக்கிருபையாலே
 தீராதவியாதியஸ்தன்தோஷம்தீரும்
கொய்பவேஅரசுபகைஇருந்தால்அப்பா
 கொடுமைஉள்ளசனியனுக்குஅபிஷேகம்தான்
நொய்தாகுநோய்அதுதான்வலுச்செய்யாது
 நுவலாதுஎன்சொல்வேன்ஜலத்தின்கூறாய்
எய்யவந்ததல்லாமற்வேறொன்றில்லை
 இவன்பிழைத்தயன்எழுத்தின்பெலன்என்பாரே. ௰௯

பிணிகொண்டஅரசுகாலமுதல்விநாடியின்பலன்.

(உ௪௧) பெலமாகஅரசுமுதல்விநாடிதன்னில்
 பெரிதாகஉடலில்வந்தபிணிதான்ஐயா

தலமான அக்கினியார் சூடுகொண்டு
ஜடலம் எல்லாம் வெந்துருகி மெழுகும் ஆகி
நலம் ஆனநாள் மூன்றில் குணம் அதாகும்
நற்சடையோன் சிவன்தனக்கு அபிஷேகம்தான்
வலம் வந்துசெய்திடவே நோய்கள் எல்லாம்
மக்களே தீர்ந்திடுதல் திண்ணம் ஆமே. உ௰

பிணிகொண்ட அரசுகால-உ-ம் விநாடியின் பலன்.

(உசக) திண்ணம் அடா அரசிரண்டாம் விநாடிதன்னில்
ஜெடலத்தில் வந்தபிணி திரம் செய்யாது
வண்ணம் அடா நாள் ஐந்தில் தீர்ந்து போகும்
வண்மை உள்ள சிவகிருபை ஆனதாலே
சொன்னேமடா அக்கினியும் பகைத்தால் வந்து
துடியான சனியினிட தோஷத்தாலே
எண்ணம் அடா பீடை அது விலகும் பாரு
எள்ளளவும் நோய் பெலனே இல்லைத்தானே. உக

பிணிகொண்ட அரசுகால-ந-ம் விநாடியின் பலன்.

(உசந) இல்லை அடா அரசு மூன்றும் விநாடிதன்னில்
எழும்பிய தோர் தேகத்தில் வந்தநோவு
தொல்லை அடா என்று சொல்லி நினைத்திடாதே
துடியான சிவனுக்கு அபிஷேகம் செய்தால்
சள்ளை அடா ஒன்றும் இல்லை நாள் எட்டுக்குள்ளே
ஜடலத்தில் வந்தபிணி தள்ளிப்போகும்
பிள்ளைகளே அக்கினியால் வந்த தோஷம்
பெலன் செய்யமாட்டாது திரும்பாரே. உஉ

பிணிகொண்ட அரசுகால-ச-ம் விநாடியின் பலன்.

(உசச) தீரமாம் அரசு நான்காம் விநாடி தன்னில்
ஜெடத்திலே வந்தபிணி தினம் தானபத்தில்
மாறிவிடு சனியினிட தோஷம் தானும்
மக்களே சிவன் தனக்குக் கிரவைநீ
நீறிவிடு நோய் அதுதான் நிலைநில்லாது
நிலத்தாசு ஒருவரிடம் பகைமையும் இல்லை
காரிழையாள் பூமடந்தை கிருபையாலே
கண்டபலன் நான் உரைத்தேன் கருத்தில்லையே. உந

பிணிகொண்ட அரசுகாலம்-ரு-ஆம்விநாடியின்பலன்.

(உசரு) கருத்தான அரசுஐந்தாம்விநாடி தன்னில்
கண்டபிணிபனிரண்டுநாளில்தீரும்
வருத்தம் அது செய்யாதுவலிதுகொஞ்சம்
மனமகிழ்ச்சிஇல்லாதுவியாதிபோலும்
பொருத்தும்அது அக்கினியாற்கண்டகூடு
பொருமைஉள்ளசிவன்உமையாள்கிருபையாலே
தரிப்பதுவேஇல்லைஇல்லைநோய்கள்தானும்
தன்மைஆய்த்தேகம்அதுசவுக்கியம்ஆமே. (உச)

பிணிகொண்டநித்திரைக்காலமுதல்விநாடியின்பலன்.

(உசகு) ஆமப்பாஉறக்கத்தில்முதல்விநாடி
அப்பனேதேகத்தில்பிணிதான்வந்தால்
காமப்பாவாயுவினாற்கண்டதோஷம்
கடினம்அடாதிரும்புவதுநாள்எட்டுக்குள்
சோமப்பாஅரசுபகைஆகாதுபாரு
சொன்னேன்அடாகாளிக்குஅபிஷேகம்செய்தால்
நாமப்பாஅனுமனுக்குவணக்கம்செய்தால்
நன்மையதாய்அப்பிணிதான்தீரும்பாரே. (உரு)

பிணிகொண்டநித்திரைக்கால-உ-ஆம்விநாடியின்பலன்.

(உசஎ) தீரும்அப்பாஉறக்கம்இரண்டாம்விநாடி தன்னில்
ஜெடத்தில்வந்தபிணிதீர்வதரிதே ஆகும்
மாறும்அப்பாலகுவாகித்திரும்பும்பின்னும்
மனத்துயரம்ரம்பவும்ஆம்இடைஞ்சல்மெத்த
ஆறும்அப்பாகண்டவர்கள்விதிப்பயனேஎன்று
அலறுவார்உலறுவார்அகிலம்தன்னில்
தேறும்மப்பாநாள்அதுதான்பதினைந்துக்குள்
திடம்ஆனகாளிக்குஅபிஷேகம்செய்யே. உசு

பிணிகொண்டநித்திரைக்கால-ங-ம் விநாடியின்பலன்.

(உசஅ) செய்யவேஉறக்கம்மூன்றும்விநாடி
தேகத்தில்பிணிவந்தால்சேதம்போல
நொய்யவேஜடலத்தைநோகச்செய்து
நொறுக்கிவிடும்வாயுவினால்வந்ததோஷம்
வையம்அதில்காளிக்கும்பலியும்பொங்கல்
வயிரவர்க்குவடமாலைமகிழ்ந்துசாத்தி

எய்யவேபண்டிதன்கைமருந்துண்டால்
இதுதீர இருபதுநாள்செல்லும்பாரே. ௨௭

பிணிகொண்டநித்திரைக்கால-௪-ம் விநாடியின்பலன்.

(௨௪௯) செல்லும்ஒருஉரக்கம்நான்காம்விநாடி
தீவினையாம் பிணிகொண்டாற்தேகந்தன்னில்
கொல்லவேவெகுகொடுமைகொள்ளும்கொள்ளும்
கூற்றுவனும்அரசுபகை ஆகநின்றால்
அல்லவேமாசம்ஒருமூன்றுக்குள்ளே
அல்லாட்டால்தீருவதுமாசம்மூன்றில்
வெல்லவேகாளிக்குஅபிஷேகம்செய்தால்
வெல்லுவதுதிண்ணம்என்றுசொல்லொண்ணாதே. ௨௮

பிணிகொண்டநித்திரைக்கால-௫-ம்விநாடியின்பலன்.

(௨௫௰) ஒண்ணாதஉறக்கம்ஐந்தாம்விநாடிதன்னில்
உத்தமனேதேகத்தில்பிணிதான் ஆனால்
எண்ணாதசாவதுதானெய்தும்எய்தும்
இசையாதஅரசுபகைஇருந்ததானால்
சண்ணாதுசண்ணும்அடாக்ஷணத்துக்குள்ளே
தனையை உள்ள அரசுமித்துருவாகநின்றால்
கண்ணாதுதீரும்என்றுசொல்லொணாது
கடினம்அடா அஞ்சுபத்துநாள்தானகாணே. ௨௯

பிணிகொண்டமரணகாலமுதல்விநாடியின்பலன்.

(௨௫௧) நாளானமரணத்தின்முதல்விநாடி
நலமானதேகத்தில்பிணிதான்வந்தால்
கேளாதேகூற்றுவன் ஆம் அரசுபகை ஆனால்
கெணிதமதுமாசம்தான இரண்டுக்குள்ளே
பாழாகப்போகுமடாஜடலம்தானும்
பழிகாரன்நோவதனால்ஒடுக்கவைப்பான்
தாளாதஆகாசவெளியின்தோஷம்
தண்மையாய்வரும்ஆனால்மாசம்ஆறே, ௩௰

பிணிகொண்டமரணகால ௨-ம் விநாடியின்பலன்.

(௨௫௨) அறுதமரணம்ரெண்டாம்விநாடிதன்னில்
அப்பனேதேகத்தில்பிணிதான்கொண்டால்
தீராதஅரசுபகைபொல்லாதப்பா
க்ஷணத்திலேதேகம்விட்டுஉயிரைநீக்கும்

தேராமல்சூனியத்தில்சேர்ந்ததோஷம்
திடமானகூற்றனவன் அவன்பிடரிநின்று
பாராமல்இவ்வுடலை அழிப்பான் அன்றோ
பழியாகும்வருஷமொன்றிற்பாருபாரே. ௩௧

பிணிகொண்டமரணகால-௩-ம் விநாடியின்பலன்.

(௨௫௩) ஒன்றானமரணம்மூன்றாம்விநாடி
உத்தமனேஉடலதனிற்பிணிதான்வந்தால்
நன்றான ஆகாசவெளியில்தோஷம்
நலமானஊண் அரசுபகை ஆகாது
சென்றானசூனியத்திற்சேர்ந்தநேரம்
திடமானகங்கையிடசாபம்போல
கன்றானஉடல்விட்டுஉயிர்போம்அப்பா
கனியாகத்திரும்புவது அரிதாமகனே. ௩௨

பிணிகொண்டமரணகால-௪-ம் விநாடியின்பலன்.

(௨௫௪) அரிதாகும்மரணம்நான்காம்விநாடி
அப்பனேஜடம் அழிக்கவந்தநோயாம்
பெரிதாகும்சத்துருநாள்மரணமேதான்
பேணியே அரசுபகை ஆகவேண்டும்
சரியானதினமரணம் ஆகவேண்டும்
சண்டாளசூனியமும்சேரவேண்டும்
குறியாக அவனுடலம் அழிந்துபோகும்
குணமாகமாட்டாது வருத்தம் ஆமே. ௩௩

பிணிகொண்டமரணகால-௫-ம் விநாடியின்பலன்.

(௨௫௫) வருத்தமடாமரணம்ஐந்தாம்விநாடிதன்னில்
மக்களேஉடல் அழிக்கவந்தநோய்தான்
கருத்தனடாபிதா ஆனபிரமன்சேர்ந்த
கணக்கென்றதொகைசரிதான் இனிவேறில்லை
விருத்தன் என்றகாலன் அவன்தானேவந்தால்
வேணபடிபட்டதினால்மருவதேது
மறுத்தொருசொல்சொல்லாதுஉயிர்போம்போது
வாழ்க்கைஎன்ன ஆசைஎன்னவருமோபாரே. ௩௪

பிணிகால அளவு.

(௨௫௬) வரும்என்றபிணிகால அளவுசொல்வேன்
வழியானஊணதனக்குமாசம்ஒன்று

குறுகியதோர்நடைதனக்குக்காலம்அப்பா
குலாவியதோர்மாசங்கள்ஆறதாகும்
தருமம்மிகும்அரசாட்சிதனக்கோஎன்னில்
தன்மைஉள்ளபட்சம்ஒன்ருய்ச்சார்ந்துநிற்கும்
மருமம்இல்லைதூக்கத்தின்காலம்மைந்தா
வருஷம்ஒன்றும்இதில்மிகுந்துவாழாதாமே. ௩௫

இதுவுமது.

(௨௫௭) வாழாதமரணத்தின்காலம்கேளு
மகிழ்ச்சிஇல்லைவருஷம்அதுமூன்றதாகும்
கேளாதபிணிக்கானகாலம்ஈதாம்
கெடுதியதாய்ச்சூனியம்உற்றிருந்ததாலே
மாளாதஅரசுபகைஆனதோஷம்
மக்களேஒன்றுபத்தாய்வளரும்பாரு
ஆளாகஅருள்செய்யும்மாமுனிவன்வாக்கால்
அறிந்தபடிஅறிவித்தேன்திண்ணம்ஆமே. ௩௬

இதுவுமது.

(௨௫௯) திண்ணமாம்ரோமரிஷிமுனிவன்வாக்கு
திண்ணம்என்றுமனதுறுதியாகக்கொண்டால்
எண்ணமாம்காலமுழுதறியலாகும்
எடுத்ததொருகாரியமும்ஜெயமேஆகும்
வண்ணமாம்ஞானவிதிகைவசமேஆகும்
மகத்தானகர்மம்எட்டும்பலிக்கும்பாரு
கண்ணதாம்வேலைகண்டுமுடிக்கவேண்டும்
கண்மணியேசாந்திசொல்வேன்கருதிப்பாரே. ௩௭

சாந்திப்பொது.

(௨௫௯) பாரடாபாரில்உள்ளமைந்தர்க்கையா
படரும்ஒருபிணிஅதுதான்விலகுதற்கு
நேரடாசாந்திசெய்தால்தீரும்பாரு
நேர்மைஉள்ளபீடையதுதீராவிட்டால்
சாரடாபாறைதனில்பாசிபற்றி
தள்ளுவதுபோல்சறுக்கிரசரீரம்நோகும்
ஏரடாதொடுத்ததிதுகர்ம்மபீடை
என்மகனேஅரிதாகும்ஊணைக்கேளே. ௩௮

ஊண்காலப்பிணிக்குச்சாந்தி.

(௨௬ய) ஊண் என்றபட்சியினால்வரும்நோய்தீர்க்க
உத்தமனேகணபதியைநிறுத்திமைந்தா
வேணமட்டும்வெள்ளைமலர்சாத்திநின்று
மேல்மேலும்உபசாரத்துடன்வணங்கி
தூணென்ற ஓம் ஸ்ரீம் ஹரீம் ரீம் சங் உங் என்
ஐயும் க்லீம் கணபதி சர்வ சாப
வாணென்ற மசி நசி எனவே மைந்தா
மனதொருமித்தாயிரத்தெட்டுருக்கான்ஓதே. ௫௯

இதுவுமது.

(௨௬௧) உருவான அதன்பிறகுகும்பம்வைத்து
ஒருபடிநெல்பரப்பிஅறுகோணம்இட்டு
திருவானகாரணபஞ்சாட்சரங்கீறி
ஜெபம்ஆனகாரிபஞ்சாட்சரமும்சேர்த்து
ஒருவானசக்கரத்தில்சூலம்இட்டு
ஓம் அம் உம் சிவ சிவா என்று நாட்டி
கருவானகும்பத்தில்ஜலம்நிறைத்து
தண்மைஉள்ளமாவிலையைஅதன்மேல்வையே. ௬ய

இதுவுமது.

(௨௬௨) வைத்தபின்புஅதன்மேலேதேங்காய்வைத்து
வாகானநூல்சுற்றிஆடைசாற்றி
வைத்ததொருகும்பத்தின்முன்னேஜபா
வஸ்துவுடன்சுத்தியும்தான்வைத்துமைந்தா
நெய்த்ததொருவர்க்கவகைமிகப்படைத்து
நேரிருந்து ஓம் ஐயும் கிலியும் சௌவும்
தைத்ததொருபாணம்அடாஅங்உங்என்று
சர்வபீடைகளும்மசிநசிஎன்றோதே. ௬௧

இதுவுமது.

(௨௬௩) ஓதடா ஆயிரத்தெட்டுருவும்ஆனால்
உத்தமனேஓமகுண்டம்இரண்டுபோடு
வாதடாசமித்துவகைசொல்லக்கேளு
வன்னிமுன்னேஅரசருவிதர்ப்பைநெல்லு
ஏதடாஆவின்நெய்ஆகுதிகள்செய்து
என்மகனேகுண்டத்திற்குபசாரம்செய்து

கோதிலா அட்சரத்தைசொல்லக்கேளு
குணமாகமுதல்உரைத்ததெடுத்துஓதே. சஉ

இதுவுமது.

(உகூச) ஓதியதோர்உருஐயாயிரமேஆனால்
உத்தமனேபெலியுடனேபொங்கல்இட்டு
கோதில்லாசாம்பல்எல்லாம்குடத்தில்போட்டு
குடத்துநீர்அவன்சிரசில்விடுக்கும்போது
ஆதிதனைச்சிவசிவாஎனநினைந்து
அப்பனேஅபிஷேகம்செய்துபாரு
நீதியாம்நாள்அதுதான்பதினொன்றானால்
நிலையாதுபீடைஎல்லாம்விலகும்பாரே. சங

இதுவுமது.

(உகூரு) விலகுமேவெள்ளியினால்தகடுசெய்து
வியாதிஉச்சாடனம்விதித்தஎழுத்தைமாறி
கலகம்இல்லாதேவிஎன்றவாலைபூசை
கைபாகம்தப்பாமல்கனிந்துசெய்து
நிலையானமுன்தகட்டைமுன்புவைத்து
நிகழ்த்தும்உச்சாடனம்உருஆயிரத்தெட்டேஆனால்
விலகாதிருந்திட்டபீடைபோச்சு
மென்மேலும்கன்னிக்குஉபசாரம்செய்யே. சச

நடைகாலப்பிணிக்குச்சாந்தி.

(உகூசா) செய்துபார்நடைஅதனிற்பீடைவரும்ஆகில்
தீர்ப்பதற்குவிநாயகரைவைத்துக்கொண்டு
கொய்துபார்குண்டம்ரெண்டுகும்பம்பத்து
கூரானசமித்துவகைசொல்வேன்மைந்தா
நைவானஅரசுவன்னிஉருவிதர்ப்பை
நல்லவிலாம்அரசுபலாசருங்காலிச்சுப்பல்
நெய்வானநெற்பொரியும்கடலைமொச்சை
நேராகக்கலந்துகொண்டுகுண்டம்போடே. சரு

இதுவுமது.

(உகூஎ) போடவேஆவின்நெய்இலுப்பைநெய்யும்
புண்ணியனேஇரண்டுமொன்றாய்க்கலந்துகொண்டு
நாடவேஎக்கியத்தில்ஆகுதிகள்செய்ய
நல்லதொருஅட்சரத்தைச்சொல்லக்கேளு

ஆடவேஓம்ஸ்ரீம்ஹரீம்அங்உங்உன்
ஐயும்கலிம்கணபதிசர்வபிடா
தேடவேமசிநசிஎன்பதிஞயிரம்தான்
செலுத்துவாய்பொங்கல்பலிஉடசாரம்செய்யே. ௬௬

இதுவுமது.

(௨௬௮) செய்துகொண்டுகுண்டத்தின்சாம்பல்எல்லாம்
திரணமும்தான்போகாமல்கும்பத்தில்போட்டு
பெய்துநீர்குளுப்பாட்டிசிவாஎன்றேதான்
பிரியம்உடன்சிவன்பாதம்பெரிதும்போற்றி
செய்துகொண்டுரவித்தகடுஅ ணில்மைந்தா
திரமானதம்பனத்தைஎழுதிக்கட்டு
வைதுகொண்டுபோகும்அடாநடையின்பிடை
மக்களேபதிஒருநாள்செய்துபாரே. ௬௭

ஆசுகால பிணிக்குசாந்தி.

(௨௬௯) செய்பவேஆரசுதனிற்பிடைவந்தால்
இடமானகணபதியைவைத்துப்போற்றி
நெய்ஆனகும்பத்தைமுன்னேவைத்து
நேர்முகமாய்வாலேதனைப்பூசைசெய்து
கொய்யவேகுண்டம்அதுஇரண்டுசெய்து
கொளுத்துகிறசமித்துவகைசொல்வேன்மைந்தா
நைவானஅரசுசெஞ்சந்தனமேஆகும்
நன்மைஉள்ளநெற்பொரிகாராவின்னெய்யே. ௬௮

இதுவுமது.

(௨௭௰) நெய்ஆன ஆகுதிகள்செய்துகொண்டு
நேர்இருந்துஉருஐயாயிரம்நீபோடு
துய்யாதபலிஉடனேதூபம்காட்டி
தோணவேசாம்பல்எல்லாம்கும்பத்திட்டு
கையாலேபிணியாள்தலைமேல்விட்டு
கருணைஉள்ளசிவன்பதத்தைக்கருத்தில்வைத்தால்
மெய்யாலேவருத்திநின்றபிணிகள்ஓடும்
மேலானசுவர்ணத்தால்தகடுசெய்யே. ௬௯

இதுவுமது.

(௨௭௧) தகடதிலேமசிஎழுத்தைவரைந்துகொண்டு
தப்பாமல்நாள்ஏழுபூசைசெய்து

விகடம்இதில்இல்லாமல்போம்போது
மேலானபிடைஎல்லாம்விலகிப்போகும்
சகடம்இதில்சிவன்கிருபைமெத்தவுண்டு
சரணிதனில்அறிந்தவர்கள்வணங்கிப்போற்றி
அகடில்லாதுலகதனில்வாழ்வார்பாரு
ஆதலினல்பிடைஇதில்விலகும்பாரு. ௬ம

நித்திரைகாலப்பிணிவுக்குச்சாந்தி.

(உஎஉ) பாரடாஉறக்கத்தில்வரும்பிசடதானே
பதிவிடுத்துவிலகுதற்குப்பக்குவம்கேள்
நேரடாகணபதியைவைத்துக்கொண்டு
நேர்முகமாய்வாலையின்முன்கும்பம்வைத்து
ஓரடாஓமகுண்டம்நால்தான்போடு
உத்தமனேசமித்துவகைஉரைப்பேன்ஐயா
கோரடாஆல்அரசுஅத்திஇத்தி
குலவியதோர்வன்னிமுன்னேஉருவிஎள்ளே. ௬க

இதுவுமது.

(உஎங) எள்ளுடனேநவதான்யம்நெற்பொரியும்சேர்த்து
என்மகனேஆவின்நெய்இலுப்பைநெய்யும்
தெள்ளுடனேதேங்காய்நெய்கலந்துகொண்டு
தெர்ப்பையினற்கோரிவிடுஉருவரும்மட்டும்
அள்ளுடனேஓம்ரீம்க்லீம்ஜம்சௌம்என்று
அப்பனேஸ்ரீம்ஹரீம்அங்உங்சிவாயென்று
கிள்ளுடனேசர்வபிடையசிநசிஎன்று
கெடியாகஉருபதினயிரம்தான்போடே. ௬உ

இதுவுமது.

(உஎச) போடடாகுண்டம்ஒன்றில்தம்பனம்தான்
புகழானமற்றொன்றில்பேதனம்தான்
கேடடாவித்வேஷணம்தான்மூன்றில்
கெடியானநான்கில்இடும்பேதனம்தான்
நாடடாபெலியுடனேதூபம்காட்டி
நலமானகுண்டத்தின்சாம்பல்வாரி
கோடடாகும்பத்தில்விடுத்துமைந்தா
குளுப்பாட்டிசிவன்தனக்குஅபிஷேகம்செய்யே. ௬௩

இதுவுமது.

(உஎரு) செய்யவேரள்மதியும்சேர்த்துக்கொண்டு
திரமாகத்தசட்டியில்உச்சாடனம்தான்கூறி
உய்யவேபிணியாளன்தனக்குக்கட்ட
ஓடிவிடும்பீடைஎன்றதோஷமெல்லாம்
துய்யவளம்கன்னிக்குஉபசாரம்செய்
சொற்பெரியவேதியர்க்கும்உபசாரம்செய்
வையகத்தில்இவைகள்எல்லாம்நன்றாநன்றும்
மக்களேமண்டலம்தான்ஆணையாய்செய்யே. (௫௪)

மரணகாலப்பணிக்குச்சாந்தி.

(உஎசா) செய்படாமரணத்தின்பீடைவரும்ஆகில்
திருப்புவதுவருத்தம்அடாசிவனைசெயலேவேண்டும்
துய்யனும்கணபதியைவைத்துப்போற்றித்
தொடுத்திடுவாய்பாலிபீடம்கும்பம்வைத்து
மெய்பானஓமகுண்டம்எட்டோடு
விளம்புகின்றசமித்துவகைசொல்வேன்மைந்தா
கைஅரசுஅத்திஇத்திஉருவிவன்னி
தனைதானகருங்காலிமாவின்கொம்பே. (௫௫)

இதுவுமது.

(உஎஎ) கொம்புடனேபுரசுசுப்பல்நெல்லிசுப்பல்
கோர்வையாய்வேதாங்கியம்பொரியும்கூட்டி
அன்புடனேமேதைநெய்யுஞ்செம்மறியின்நெய்யும்
அப்பனேஇலுப்பைநெய்யுந்தேங்காய்நெய்யும்
தென்புடனேபுன்னைநெய்யும்புங்கன்நெய்யும்
தெளிவானவேம்பின்நெய்பன்றிநெய்யும்
இன்புடனேகேசரியின்நெய்யும்கூட்டி
எடுத்திடுவாய்எக்கியத்தில்இனிதாம்பாரே. (௫௬)

இதுவுமது.

(உஎஅ) பாரோகுண்டம்எட்டில்கர்மம்எட்டும்
பாங்காகஜபம்பதினாயிரமேஆனால்
வேறேநீநினையாதேபொங்கல்பலிதூபம்
வேணதும்செய்தெரிந்ததனைக்கும்பத்திட்டு
நேரோநின்றுசதாசிவத்தைப்போற்றி
நீர்கொண்டுஅவன்சிரசில்அபிஷேகிக்கால்

